[26th March 1958

THE HON. SRI R. VENKATARAMAN : சார், வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சமாளிப்பதற்காக சிறுசிறு தோல் பதனிடும் சாலைகளை ஆரம்பித்திருக்கிறோம். அதில் அதிகமான எண்ணிக்கையில்கூடத் தொழிலாளர்கள் இல்லை. சாதாரணமாக ஓர் இடத்தில் ஏழு பேர், எட்டு பேர்கள் கூட இருக்கமாட்டார்கள். அதற்குள்ளாக இந்தச் சட்டங்கள் எல்லாவற்றையும் அங்கு அமுல் நடத்தவேண்டுமென்று சொல்வது சரியாகாது.

SRI D. S. AUTHIMOOLAM : அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும் போது ரூ. 80,000-க்கு சரக்கு தயார் செய்யப்பட்டு பாதிதான் அவ்வருஷத்தில் செலவானதாகச் சொன்னார்கள். ஆகவே, அதைப் பிரபலப்படுத்த கலர் வால் போஸ்டேர்ஸ், முதலியன போட்டு விளம்பரம் செய்ய சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதை வாங்கி உபயோகப் படுத்தினவர்கள் எல்லோரும் அது நன்றாகயிருக்கிறது என்று சொல்லி அவர்களால் செய்யப்படும் விளம்பரம் மூலமே அவை செலவாகின்றன.

*Pumping of river water*

* 410 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Government have received any mahazar recently from the villagers of Muthupet and surrounding villages in Tiruturaipundi taluk regarding the pumping of Pamani river water for irrigation purposes; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes.

(*b*) The Government have already examined the matter with reference to earlier petitions on the subject. The ryots who would be benefited by the Scheme were reluctant to give their consent to pay any contribution, working expenses and water charges. The Scheme was therefore, deferred. The party owing a major portion of lands, namely, the Superintendent, Sri Mantharapureeswarar Temple Devasthanam desired to know the approximate cost of the scheme. The Chief Engineer (Irrigation) has furnished to him the information. Further action will be taken on receipt of the party's reply.

SRI A. VEDARATHNAM : அங்குள்ள தேவஸ்தானம் நிலம் தவிர பாக்கி எல்லா நிலச்சுவான்தாரர்களும் இந்தத் திட்டத்தை ஏற்று அதற்கான கான்ட்ரிபியூஷன் கொடுக்க ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் அல்லவா ? தேவஸ்தான நிலத்திற்கும் அந்தப் பாசனம் கிடைப்பதால், அதிக வருவாய் கிடைக்கின்ற காரணத்தினால், அதற்கு அரசாங்கம்தானே அனுமதி அளிக்க வேண்டியது. ஆகவே, இந்தப் பாசனத்திற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : தேவஸ்தானம் சூப்பிரண்ட்டெண்டைத் தவிர மற்ற விவசாயிகள் எல்லாம் செலவழிக்கின்ற தொகையைக் கொடுக்க முடியாத நிலையில் இருப்பதால் கடைசியில் அவர் வந்து கேட்டார். அதற்கு எவ்வளவு செலவாகும் என்று கேட்டதற்கு வேண்டிய விவரங்கள் எழுதியனுப்பப்பட்டிருக்கிறது.